உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவபூஜைத் திரட்டு

இதில்
சைவ சமயாசாரியர்களின் நூல்களிலிருந்து
சிவபூஜைக்குரிய செய்யுள்கள்
திரட்டி அச்சிடப்பட்டுள்ளன.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1925

விலை அணா 3

# சிவாலய தரிசன விதி



திருக்கோயிலுக்கு எப்படிப் போதல்வேண்டும்?

ஸ்நானஞ்செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரந் தரித்துச் சந்தியா வந்தன முதலியன முடித்துக்கொண்டு; தேங்காய் பழம், பாக்கு வெற்றிலை, கருப்பூரம் முதலியன வைக்கப்பட்ட பாத்திரத்தைத் தாமே எடுத்துக்கொண்டேனும், பிறரால் எடுப்பித்துக்கொண்டே னும் வாகனாதிகளின்றி நடந்து போதல்வேண்டும்.

திருக்கோயிலுக்குச் சமீபித்தவுடனே யாது செய்தல்வேண் டும்?

கால்களைக் கழுவி ஆசமனஞ்செய்து, தூலலிங்கமாகிய திருக் கோபுரத்தைத் தரிசித்து, இரண்டு கைகளையுஞ் சிரசிலே குவித்துச் சிவநாமங்களை உச்சரித்துக்கொண்டு உள்ளே போதல்வேண்டும்.

திருக்கோயிலுள்ளே போனவுடன் யாதுசெய்தல்வேண்டும்?

பலிபீடத்தையும், துசத்தம்பத்தையும், இடபதேவரையும் கும் பிட்டுப் பலிபீடத்துக்கு இப்பாலே, வடக்கு நோக்கிய சந்நிதியாயி னும் மேற்கு நோக்கிய சந்நிதியாயினும் இடப்பக்கத்திலும், கிழக்கு நோக்கிய சந்நிதியாயினும் தெற்கு நோக்கிய சந்நிதியாயினும் வலப் பக்கத்திலும் நின்று, அபிஷேக சமயம் நிவேதன சமயமல்லாத சமயத்திலே, ஆடவர் அட்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ் சாங்க நமஸ்காரமும், மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழு தரமாயினும், ஒன்பதுதரமாயினும், பன்னிரண்டுதரமாயினும் பண் ணல் வேண்டும். நமஸ்காரம் ஒருதரம் இருதரம் பண்ணல் குற்றம்.

அட்டாங்க நமஸ்காரமாவது யாது?

தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டவயவமும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதல்.

இந்த நமஸ்காரம் எப்படிப் பண்ணல்வேண்டும்?

பூமியிலே சிரசைவைத்து, மார்பு பூமியிலே படும்படி வலக் கையை முன்னும் இடக்கையைப் பின்னும் நேரே நீட்டிப் பின் அம் முறையே மடக்கி, வலப்புயமும் இடப்புயமும் மண்ணிலே பொரு ந்தும்படி கைகளை அரையை நோக்க நீட்டி, வலக்காதை முன்னும் இடக்காதைப்பின்னும் மண்ணிலே பொருந்தச்செய்தல்வேண்டும்.

*பஞ்சாங்க நமஸ்காரமாவது யாது?*

தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்தவயவமும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதல்.

*நமஸ்காரம் பண்ணியபின் யாது செய்தல் வேண்டும்?*

எழுந்து, இரண்டு கைகளையுங் குவித்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு, கால்களை மெல்லவைத்து மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும், பதினைந்துதரமாயினும், இருபத்தொருதரமாயினும் பிரதக்ஷிணம் பண்ணி, மீட்டும் சந்நிதானத்திலே நமஸ்காரம் பண்ணல்வேண்டும்.

*சுவாமி சந்நிதானங்களை எந்த முறையாகத் தரிசனஞ் செய்தல்வேண்டும்?*

முன்பு துவாரபாலகரை வணங்கி, பின்பு கணநாயகராகிய திருநந்திதேவரை வணங்கித் துதித்து, "பகவானே! உம்முடைய திருவடிகளை அடைந்து அடியேன் உள்ளே புகுந்து சிவபெருமானைத் தரிசித்துப் பயன் பெறும்பொருட்டு அநுமதி செய்தருளும்" என்று பிரார்த்திக்கொண்டு, உள்ளே போய், முன் விக்கினேசுரரைத் தரிசனஞ்செய்து, பின் சிவலிங்கப்பெருமான் சந்நிதியையும் உமாதேவியார் சந்நிதியையும் அடைந்து, ஆதிசைவரைக் கொண்டு அருச்சனை செய்வித்துப் பழம் பாக்கு வெற்றிலை முதலியனவற்றை நிவேதிப்பித்துக் கருப்பூர ஆராத்திரிகம் பணிமாறப் பண்ணித்தரிசனஞ் செய்து, விபூதிவாங்கித் தரித்துக்கொண்டு, அதன்பின் சபாபதி, தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளையுஞ் சமயகுரவர் நால்வரையுந் தரிசனஞ் செய்தல்வேண்டும்.

*விக்கினேசுரரைத் தரிசிக்கும்பொழுது யாதுசெய்தல்வேண்டும்?*

முட்டியாகப் பிடித்த இரண்டு கைகளினாலும் நெற்றியிலே மூன்றுமுறை குட்டி, வலக்காதை இடக்கையினாலும் இடக்காதை வலக்கையினாலும் பிடித்துக்கொண்டு மூன்றுமுறை தாழ்ந்தெழுந்து கும்பிடல்வேண்டும்.

*தரிசனம் முடிந்தவுடன் யாதுசெய்தல் வேண்டும்?*

பிரதக்ஷிணஞ்செய்து சண்டேசுரர் சந்நிதியை அடைந்து கும்பிட்டுத் தோத்திரஞ்செய்து மூன்றுமுறை கைகொட்டிச் சிவதரிசன பலத்தைத் தரும்பொருட்டுப் பிரார்த்தித்து வலமாக வந்து

இடபதேவருடைய இரண்டு கொம்பினடுவே சிவலிங்கப்பெருமானைத் தரிசித்துப் பலிபீடத்துக்கு இப்பால் மும்முறை நமஸ்கரித்து எழுந்து இருந்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை நூறுதரமும் அகோரமந்திரத்தை நூறுதரமுஞ் செபித்துக்கொண்டு எழுந்து வீட்டுக்குப் போதல்வேண்டும்.

## திருக்கோயிலில் செய்யத்தகும் சிவபுண்ணியங்கள்.

நாடோறும் சூரியன் உதிக்குமுன் எழுந்து ஸ்நானஞ்செய்து அனுட்டானம் முடித்துக்கொண்டு வந்து மெல்லிய மார்ச்சனியினாலே கிருமிகள் சாவாமல் மேற்படத் திருவலகிடுதலும், ஈன்றணிமையதும் நோயினதுமல்லாத பசுவினது சாணியைப் பூமியில் விழுமுன் இலையில் ஏற்றாயினும், அது கூடாதாயிற் சுத்த நிலத்தில் விழுந்த சாணியை மேல்கீழ் தள்ளி நடுப்பட எடுத்தாயினும், வாவி நதி முதலியவற்றில் வடித்தெடுத்துக் கொண்டுவந்த நீரோடு கூட்டித் திருமெழுக்குச் சாத்தலும், திருநந்தனவனத்திலே விதிப்படி பூக்களைக் கொய்து பழுதுநீக்கித் திருமாலைகட்டிச் சிவபெருமானுக்குச் சாத்துவித்தலும், சிவசந்நிதியிலே தமிழ் வேதத்தைப் பண்ணோடு பாடுதலும், அதனைச் சாரங்கியில் ஏற்றி வாசித்தலும், சிவதோத்திரங்களைச் சொல்லிக் கைகொட்டி ஆனந்தக் கூத்தாடுதலும், சுகந்ததூபம் இடுதலும், திருவிளக்கேற்றுதலும், சிவபுராணங்களை வாசித்துப் பொருள் சொல்லுதலும், அதனைக் கேட்டலும், பிராகாரங்களில் உள்ள புல்லைச் செதுக்குதலும், தங்கள் தங்கள் செல்வத்துக்கு ஏற்பத் திருப்பணியும் பூசையுஞ் செய்வித்தலும், பிறவுமாம்.

## திருக்கோயிலில் செய்யத்தகாத குற்றங்கள்.

ஆசாரமில்லாது போதல், கால்கழுவாது போதல், சனனாசௌச மரணாசௌசத்தோடு போதல், எச்சிலுமிழ்தல், மலசலங் கழித்தல், மூக்குநீர் சிந்துதல், அபானவாயு விடுதல், பாக்கு வெற்றிலையுண்டல், தம்பலமுமிழ்தல், போசனபானம் பண்ணுதல், நித்திரைசெய்தல், க்ஷௌரம் பண்ணுவித்துக்கொள்ளுதல், எண்ணெய்

தேய்த்தல், தலை பார்த்தல், மயிர்கோதி முடித்தல், சூதாடல், சிரசிலே வேட்டி கட்டிக்கொள்ளுதல், தோளிலே உத்தரீய மிட்டுக்கொள்ளுதல், போர்த்துக் கொள்ளுதல், சட்டையிடுதல், வாகனமேறிச் செல்லுதல், குடை பிடித்துக்கொள்ளுதல், தீவர்த்தி பிடித்துக்கொள்ளுதல், உன்னத தானத்திருத்தல், ஆசனத்திருத்தல், தூபி துசத்தம்பம் பலிபீடம் இடபம் விக்கிரகம் என்னும் இவைகளின் சாயையை மிதித்தல், விக்கிரகத்தையும் நிர்மாலியத்தையுந் தீண்டுதல், திருவிளக்குச் சாயையிலும் சிவலிங்கச் சாயையிலும் தன்னிழலிடுதல், பெண்களைப் புகழ்தல், பெண்களைத் தீண்டல், பெண்களை இச்சித்துப் பார்த்தல், பெண்களைப் புணர்தல், தெற்கு நோக்கிய சந்நிதியிலும் கிழக்கு நோக்கிய சந்நிதியிலும் இடப்பக்கத்தில் நமஸ்காரமும் செபமும் பண்ணுதல், ஒருதரம் இருதரம் நமஸ்கரித்தல், ஒருதரம் இருதரம் வலம்வருதல், ஓடி வலம்வருதல், சிவபெருமானுக்கும் இடபதேவருக்கும் குறுக்கே போதல், அவர்களுக்குப் புறங்காட்டுதல், ஒரு கை குவித்தல், அகாலத்திலே தரிசித்தல், சிவபெருமானுக்கும் பலிபீடத்துக்கும் இடையே நமஸ்கரித்தல், வீண்பேசுதல், அசப்பியம் பேசுதல், அசப்பியங் கேட்டல், சிரித்தல், வீண்கீதம் பாடல், வீண்கீதங் கேட்டல், தேவத்திரவியத்தை இச்சித்தல், கீழ்மக்களைப் புகழ்தல், மேன்மக்களை யிகழ்தல், துர்த்தேவதைகளை வழிபடுதல், சிவபெருமானை முற்பக்கத்தும் பிற்பக்கத்தும் இடப்பக்கத்தும் நின்று வணங்குதல், திருவிளக்கு அவியக்கண்டும் தூண்டாதொழிதல், திருவிளக் கில்லாதபொழுது வணங்குதல், உற்சவங் கொண்டருளும்பொழுது அங்கேயன்றி உள்ளேபோய் வணங்குதல், குரவர் முதலியோரை வணங்குதல் முதலியனவாம். சிவதீர்த்தம் திருநந்தனவனம் திருமடம் என்னுமிவைகளிலும் மலசலங்கழித்தல், எச்சிலுமிழ்தல், மூக்குநீர் சிந்துதல், புணர்ச்சிமுதலிய அசுசிகளைச் செய்யலாகாது. இக் குற்றங்களுள் ஒன்றை அறியாது செய்தவர் உருத்திரஞ் செபிக்கின், அக் குற்றம் நீங்கும். உருத்திரத்துக்கு உரியால்லாதவர் அகோர மந்திரத்தில் ஆயிரம் உருச் செபிக்கின், அக் குற்றம் நீங்கும். இக் குற்றங்களை அறிந்து செய்தவர் நரகத்தில் விழுந்து வருந்துவர்; அவருக்குப் பிராயச்சித்தம் இல்லை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவபூஜைத் திரட்டு

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

முதற் திருமுறை

திருவலிவலம் - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

[ஸ்நாநஞ் செய்ய]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவாலங்காடு - பண் - திருத்தாண்டகம்

ஒன்றா வுலகனைத்து மானார் தாமே
  யூழிதோ றூழி யுயர்ந்தார் தாமே
நின்றாகி யெங்கு நிமிர்ந்தார் தாமே
  நீர்வளிதீ யாகாச மானார் தாமே
கொன்றாடுங் கூற்றை யுடையார் தாமே
  கோலப் பழனை யுடைத்தார் தாமே
சென்றாடு தீர்த்தங்க ளானார் தாமே
  திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. (1)

திருமந்திரம் - பத்தாந் திருமுறை

அறிவா ரமரர்க ளாதிப் பிரானைச்
செறிவா னுறைபதஞ் சென்று வலங்கொண்
மறிவார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார் புனன்மூழ்கப் புண்ணிய ரமே. (2)

[அனுட்டானஞ் செய்ய]

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்-இரண்டாந் திருமுறை

திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் - பண் - காந்தாரம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவால வாயான் றிருநீறே. (3)

திருநாவுக்கரசு சுவாமிகள் - நான்காந் திருமுறை

தனித்திரு நேரிசை

சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாம வேதி
யந்தரத் தமரர் பெம்மா னானல்வெள் ளூர்தி யான்றன்
மந்திர நமச்சி வாய வாகநீ றணியப் பெற்றால்
வெந்தறும் வினையு நோயும் வெவ்வழல் விறகிட் டன்றே, (4)

திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளாற்
றிருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபாதி ரிப்புலி யூரானே. (5)

[ஜெபஞ் செய்ய]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - மூன்றாந் திருமுறை

நமச்சிவாயத் திருப்பதிகம் - பண் - கௌசிகம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
யோது வார்தமை நன்னெறிக் குய்ப்பதும்
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத நாம நமச்சி வாயவே. (6)

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

பலவகைத் திருத்தாண்டகம்

தந்தையார் தாயா ருடன் பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமா மிதற்கேது மகிழ வேண்டா
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின்
திகழ்மதியும் வாளரவுந் திளைக்குஞ் சென்னி
யெந்தையார் திருநாம நமச்சி வாய
வென்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே. (7)

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருநல்லம் - பண் - திருக்குறுந்தொகை

அல்ல லாகவைம் பூதங்க ளாட்டினும்
வல்ல வாறு சிவாய நமவென்று
நல்ல மேவிய நாத னடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே. (8)

[பூசை செய்ய ஆரம்பிப்பதற்குமுன் தோத்திரஞ் செய்ய]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - முதலாந் திருமுறை

திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை

தோடு டையசெவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடு டையசுட லைப்பொடிப் பூசியென் னுள்ளங் கவர்கள்வ
னேடு டையமல ரான்முனை நாள்பணிந் தேத்த வருள்செய்த
பீடு டையபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (9)

திருநாவுக்கரசு சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருவதிகை வீரட்டானம் - பண் - கொல்லி

கூற்றா யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியே
னேற்றா யடிக்கே யிரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதுந்
தோற்றா தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
வாற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. (10)

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருவெண்ணெய்நல்லூர் - பண் - இந்தளம்

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
வெத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை [யுள்
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறை
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (11)

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவாலவாய்த் திருத்தாண்டகம்

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறாத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (12)

[பூதசுத்தி செய்ய]

ஷை சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருக்கற்குடி - திருத்தாண்டகம்

மண்ணதனி லைந்தைமா நீரி னான்கை
வயங்கெரியின் மூன்றைமா ருதத்தி ரண்டை
விண்ணதனி லொன்றை விரிக திரைத்
தண்மதியைத் தாரகைக டம்மின் மிக்க
வெண்ணதனி லெழுத்தையே ழிசையைக் காம
னெழிலழிய வெரியுமிழ்ந்த விமையா நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னானே. (13)

ஷை. சுவாமிகள் - நான்காந் திருமுறை

சிவனெனுமோசை - பண் - பியந்தைக்காந்தாரம்

விரிகதிர் நாயிறல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணு நிலனும்

திரிதரு வாயுவல்லர் செறிதீயு மல்லர்
தெளிநீரு மல்லர் தெரியி
லரிதரு கண்ணியாளை யொருபாக மாக
வருள்கார ணத்தில் வருவா
ரெரியா வாரமார்வ ரிமையாரு மல்ல
ரிமைப்பாரு மல்ல ரிவரே. (14)

[உட்பூசை செய்ய]

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

தனித் திருநேரிசை

காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே. (15)

ஷை சுவாமிகள் - இரண்டாந் திருமுறை

தனித் திருக்குறுந்தொகை

தேனைத் தேறித் தெளிந்து தித்திப்பதோ
ருள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே (16)

கோயிற் றிருக்குறுந்தொகை

பனைக்கை மும்மத வேழ முரித்தவ
னினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவ
னனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ. (17)

ஷ்டி சுவாமிகள் - முதற் றிருமுறை

தனித் திருநேரிசை

உடம்பெனு மனைய கத்து ளுள்ளமே தகளி யாக
மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிம யக்கி
யிடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே. (18)

கோயில் திருவிருத்தம் - பண் - கொல்லி

முடிகொண்ட மத்தமு முக்கண்ணி னோக்கு முறுவலிப்புந்
துடிகொண்ட கையுந் துதைந்தவெண் ணீருஞ் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலுமென் பாவிநெஞ்சிற்
குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன் குரைகழலே. (19)

[துவாரபூசை செய்ய]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருப்புன்கூர் - பண் - தக்கேசி

நற்றமிழ் வல்ல ஞானசம் பந்த
னாவினுக் கரைய னாளைப்போ வானுங்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரண்மணிக் கமலங்கண் மலருங்
பொய்கை சூழ்திருப் புன்கூரு ளானே. (20)

மூவெயில் செற்றஞான் றுய்ந்த மூவரி
லிருவர் நின்றிருக் கோயிலின் வாய்தல்

காவ லாளரென் றேவிய பின்னை
யொருவ னிகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநட மகிழ
மணிமு ழாமுழக் கவருள் செய்த
தேவ தேவநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (21)

[சிவோகம் பாவனை செய்ய]

ஷை சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருவொற்றியூர் - பண் - தக்கேசி

வழித்த லைப்படு வான்முயல் கின்றே
னுன்னைப் போலென்னைப் பாவிக்க மாட்டேன்
கழித்த லைப்பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளங்
கழித்த லைப்பட்ட நாயது போல
வொருவன் கோல்பற்றிக் கறகற விழுக்கை
யொழித்து நீயரு ளாயின செய்யா
யொற்றி யூரெனு மூருறை வானே. (22)

திருநாவுக்கரசு சுவாமிகள் - மூன்றாந் திருமுறை

கோயிற் திருநேரிசை - பண் - கொல்லி

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகி
யெத்தினாற் பத்தி செய்கே னென்னைநீ யிகழ வேண்டாம்
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வாறே. (23)

[திரவியசுத்தி செய்ய]

சுவாமிகள் - ஆறாந் திருமுறை

நின்ற திருத்தாண்டகம்

ஆவாகி யாவினி லைந்துமாகி
யறிவாகி யழலாகி யவியுமாகி
நாவாகி நாவுக்கோ ருரையுமாகி
நாதனாய் வேதத்தி னுள்ளானாகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்றமாகிப்
புக்குளால் வாசமா நின்றானாகித்
தேவாகித் தேவர்மு தலுமாகிச்
செழுஞ்சுடராய்ச் சென்றடிக ணின்றவாறே. (24)

[மந்திரசுத்தி செய்ய]

சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருப்புள்ளிருக்கும்வேளூர் - திருத்தாண்டகம்

பேராயி ரம்பரவி வானோரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா வடியார்க்கென்றும்
வாராத செல்வம் வருவிப்பானை
மந்திரமுந் தந்திரமு மருந்துமாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான்றன்னைத்
திரிபுரங்க டீயெழத்தின் சிலைகைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கும் வேளூரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கினேனே. (25)

[பேட்டகக்கோயில் திறக்க]

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருமறைக்காடு - திருக்குறுந்தொகை

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. (26)

[பேட்டகக்கோயிலினின்றும் உடையவரை
எழுந்தருளப்பண்ண]

ஷை சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருப்புள்ளிருக்குவேளூர் - திருத்தாண்டகம்

ஆண்டானை யடியேனை யாளாக்கொண்டு
அடியோடு முடியயன்மா லறியாவண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் றன்னை
நேமிவான் படையானி னுரவோனாகங்
கீண்டானைக் கேதார மேவினானைக்
கேடிலியைக் கிளர்பொறிவா ளரவோடென்பு
பூண்டானைப் புள்ளிருக்கும் வேளூரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கினேனே. (27)

[ஸ்நானவேதிகையில்
உடையவரை எழுந்தருளச் செய்தபின் சொல்ல]

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

கடுவாய்க்கரைத்திருப்புத்தூர் - திருக்குறுந்தொகை

பந்த பாசம றுத்தெனை யாட்கொண்ட
மைந்த னைம்மண வாளனை மாமலர்க்

கந்த நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எந்தை யீசனைக் கண்டினி தாயிற்றே. (28)

[இலிங்கசுத்தி செய்ய]

ஷை சுவாமிகள் - ஆறாந் திருமுறை

நின்ற திருத்தாண்டகம்

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
யியமான னாயெறியுங் காற்றுமாகி
யருநிலைய திங்களாய் ஞாயிறாகி
யாகாச மாயட்ட மூர்த்தியாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி
நெருநலையா யின்றாகி நாளையாகி
நிமிர்புன் சடையடிக ணின்றவாறே. (29)

[அஷ்டபுஷ்பஞ் சாத்த]

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருமறைக்காடு - திருக்குறுந்தொகை

அட்ட மாமலர் சூடிய டம்பொடு
வட்டப் புன்சடை மாமறைக் காடரோ
கட்ட மாடியு நான்மறை பாடியு
மிட்ட மாகவி ருக்குமி டமதே. (30)

[தூப தீபம்]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்-மூன்றாந் திருமுறை

திருச்சண்பைநகர் - திருவிராகம் - பண் - சாதாரி

எந்தமது சிந்தைபிரி யாதபெரு மானெனவி றைஞ்சியிமை யோர்
வந்துதுதி செய்யவளர் தீபமொடு தூபமலி வாய்மை யதனு

வந்தியமர் சந்திபல வர்ச்சனைகள் செய்யவமர் கின்ற வழகன்
சந்தமலி கொந்தணைநன் மாதினொடு மேவுபதி சண்பை நகரே. (31)

[எண்ணெய்க் காப்பு]

ஷை சுவாமிகள் - மூன்றாந் திருமுறை

கோயில் - பண் - காந்தாரபஞ்சமம்

ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர் அந்தணர் பிரியாத சிற்றம்பல
நாடினா யிடமா நறுங்கொன்றை நயந்தவனே [வெண்டிங்கள்
பாடினாய் மறையோடுபல் கீதமும் பல்சடைப்பனி கால்கதிர்
சூடினா யருளாய் சுருங்கவெந் தொல்வினையே. (32)

[நெல்லிக் காப்பு]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருநீலக்குடி - திருக்குறுந்தொகை

செய்ய மேனியன் றேனொடு பால்தயிர்
நெய்ய தாடிய நீலக்கு டியரன்
மைய லாய்மற வாமனத் தார்க்கெலா
கையில் ஆமல கக்கனி யொக்குமே. (33)

[பஞ்சகவ்விய அபிஷேகம்]

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

பாவநாசத் திருக்குறுந்தொகை

பாவ மும்பழிப் பற்றற வேண்டுவீர்
ஆவி லைஞ்சுகந் தாடுமெ வன்கழல்
மேவ ராய்மிக வும்மகிழ்ந் துள்குமின்
காவ லாளன் கலந்தருள் செய்யுமே. (34)

[பஞ்சாமிர்த அபிஷேகம்]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - முதற் றிருமுறை

திருச்செங்காட்டங்குடி - பண் - பழந்தக்கராகம்

பாலினு னறுநெய்யாற் பழத்தினுற் பயின்ருட்டி
நூலினுன் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்தச்
சேலினுர் வயல்புடைசூழ் செங்காட்டங் குடியதனுட்
காலினுற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே. (35)

[நெய் அபிஷேகம்]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆரூந் திருமுறை

திருப்புகலூர் - திருத்தாண்டகம்

நெய்யாடி நின்மலனே நீலகண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே
மையாடு கண்மடவாள் பாகத்தானே
மான்ருே லுடையாய் மகிழ்ந்துநின்ருய்
கொய்யாடு கூவிளங் கொன்றைமாலை
கொண்டடியே னுனிட்டுக் கூறிநின்று
பொய்யாத சேவடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே. (36)

[பால் அபிஷேகம்]

ஷை சுவாமிகள் - இரண்டாந் திருமுறை

திருவெண்காடு - திருக்குறுந்தொகை

பாலை யாடுவர் பன்மறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனர்
வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவ ரங்கமே. (37)

[தயிர் அபிஷேகம்]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருவோண காந்தன் றளி - பண் - இந்தளம்

நெய்யும்பாலுந் தயிருங்கொண்டு நித்தம்பூசனை செய்யலுற்றார்
கையிலொன்றுங் காணமில்லைக் கழலடிதொழு துய்யினல்லா
லைவர்கொண்டிங் காட்டவாடி யாழ்குழிப்பட் டழுந்துவேனுக்
குய்யுமாறென் றருளிச்செய்யீ ரோணகாந்தன் றளியுளீரே. (38)

[தேன் அபிஷேகம்]

ஷை சுவாமிகள் - திருமுறை

திருவாவடுதுறை - பண் - தக்கேசி

வான நாடனே வழித்துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே
ஏன மாவெயி றுமையு மென்பு
மீடு தாங்கிய மார்புடை யானே
தேனெய் பால்தயி ராட்டுகந் தானே
தேவ னேதிரு வாவடு துறையு
ளானே யேயெனை யஞ்சலென் றருளா
யாரெ னக்குற வமரர்க ளேறே. (39)

[கருப்பஞ்சாறு அபிஷேகம்]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவீழிமிழலை - திருத்தாண்டகம்

ஆலைப்படு கரும்பின் சாறுபோல
வண்ணிக்கு மஞ்செழுத்தி னாமத் தான்காண்
சீலமுடை யடியார்சிந் தையான்காண்
திரிபுரமூன் றெரிபடுத்த சிலையினான்காண்

பாலினொடு தயிர்நறுநெய் யாடினான்காண்
  பண்டரங்க வேடன்காண் பலிதேர்வான்காண்
வேலைவிட முண்டமிடற் றினான்காண்
  விண்ணிழிதண் வீழிமிழ லையானே. (40)

[பல்கனிச்சாறு அபிஷேகம்]

அப்பர் சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருவிடைமருதூர் - திருக்குறுந்தொகை

கனியி லுங்கட்டி பட்டக ரும்பிலும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரிலுந்
தனிமு டிகவித் தாளுமர சிலும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே. (41)

[இளநீர் அபிஷேகம்]

அப்பர் சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவீழிமிழலை - திருத்தாண்டகம்

நெய்யினொடு பாலிளநீ ராடினான்கா
  ணித்தன்மண வாளனென நிற்கின்றான்காண்
கையின்மழு வாளொடுமா னேந்தினான்காண்
  காலனுயிர் காலாற்கழி வித்தான்காண்
செய்யதிரு மேனிவெண்ணீற் றினான்காண்
  செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தினான்காண்
வெய்யகனல் விளையாட்டா டினான்காண்
  விண்ணிழிதண் வீழிமிழ லையானே. (42)

[தயிர் அபிஷேகம்]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருவோண காந்தன் றளி - பண் - இந்தளம்

நெய்யும்பாலுந் தயிருங்கொண்டு நித்தம்பூசனை செய்யலுற்றார்
கையிலொன்றுங் காணமில்லைக் கழலடிதொழு துய்யினல்லால்
ஐவர்கொண்டிங் காட்டவாடி யாழ்குழிப்பட் டழுந்துவேனுக்
குய்யுமாறொன் றருளிச்செய்யீ ரோணகாந்தன் றளியுளீரே. (38)

[தேன் அபிஷேகம்]

ஷை சுவாமிகள் - திருமுறை

திருவாவடுதுறை - பண் - தக்கேசி

வான நாடனே வழித்துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே
ஏன மாவெயி றாமையு மென்பு
மீடு தாங்கிய மார்புடை யானே
தேனெய் பால்தயி ராட்டுகந் தானே
தேவ னேதிரு வாவடு துறையு
ளானே யேயெனை யஞ்சலென் றருளா
யாரெ னக்குற வமரர்க ளேறே. (39)

[கருப்பஞ்சாறு அபிஷேகம்]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவீழிமிழலை - திருத்தாண்டகம்

ஆலைப்படு கரும்பின் சாறுபோல
வண்ணிக்கு மஞ்செழுத்தி னாமத் தான்காண்
சீலமுடை யடியார்சிந் தையான்காண்
டிரிபுரமூன் றெரிபடுத்த சிலையினான்காண்

பாலினொடு தயிர்நறுநெய் யாடினான்காண்
　　பண்டரங்க வேடன்காண் பலிதேர்வான்காண்
வேலைவிட முண்டமிடற் றினான்காண்
　　விண்ணிழிதண் வீழிமிழ லையானே. (40)

[பல்கனிச்சாறு அபிஷேகம்]

அப்பர் சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருவிடைமருதூர் - திருக்குறுந்தொகை

கனியி லுங்கட்டி பட்டக ரும்பிலும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரிலுந்
தனிமு டிகவித் தாளும ரசிலும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே. (41)

[இளநீர் அபிஷேகம்]

அப்பர் சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவீழிமிழலை - திருத்தாண்டகம்

நெய்யினொடு பாலிளநீ ராடினான்கா
　　ணித்தன்மண வாளனென நிற்கின்றான்காண்
கையின்மழு வாளொடுமா னேந்தினான்காண்
　　காலனுயிர் காலாற்கழி வித்தான்காண்
செய்யதிரு மேனிவெண்ணீற் றினான்காண்
　　செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தினான்காண்
வெய்யகனல் விளையாட்டா டினான்காண்
　　விண்ணிழிதண் வீழிமிழ லையானே. (42)

[சந்தனக்குழம்பு அபிஷேகம்]

அப்பர் சுவாமிகள் - நான்காந் திருமுறை

தனித் திருநேரிசை

தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியி னன்னீர்
கொண்டிருக் கோதி யாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி
யிண்டைகொண் டேற நோக்கி யீசனை யெம்பி ரானைக்
கண்டனைக் கண்டி ராதே காலத்தைக் கழித்த வாறே. (43)

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - மூன்றாந் திருமுறை

திருக்கானப்பேர் - பண் - கொல்லி

வாவிவாய்த் தங்கிய நண்சிறை வண்டினங்
காவிவாய்ப் பண்செயுங் கானப்பே ரண்ணலை
நாவிவாய்ச் சாந்துளும் பூவுளு ஞானநீர்
தூவிவாய்ப் பெய்துநின் றூட்டுவார் தொண்டரே. (44)

[தூபம்]

அப்பர் சுவாமிகள் - முதற் திருமுறை

திருச்செங்காட்டங்குடி - பண் - பழந்தக்கராகம்

தொங்கலுங் கமழ்சாந்து மகிற்புகையுந் தொண்டர்கொண்
டங்கையாற் றொழுதேத்த வருச்சனற்கன் றருள்செய்தான்
செங்கயல்பாய் வயலுடுத்த செங்காட்டங் குடியதனுட்
கங்கைசேர் வார்சடையான் கணபதீச் சரத்தானே. (45)

[சுத்தஜல அபிஷேகம்]

அப்பர் சுவாமிகள் - முதற் திருமுறை

திருவிடைமருதூர் - பண் - தக்கராகம்

குடங்கொண் டடியார் குளிர்நீர் சுமந்தாட்டப்
...

படங்கொண் டதோர்பாம் பரையார்த் தபரம
னிடங்கொண் டிருந்தான் றனிடை மருதீதோ.

[உடையவரைப் பீடத்தி லெழுந்தருளப்பண்ண]

ஷை சுவாமிகள் - இரண்டாந் திருமுறை

திருப்புள்ளிருக்கும்வேளூர் - பண் - சீகாமரம்

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதிய
முள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கும் வேளூரே. (47)

[ஆவாகனஞ் செய்ய]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

சித்தத்தொகை - திருக்குறுந்தொகை

அண்ட மாரிரு ளூடுக டந்தும்பர்
உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்
கண்டிங் காரறி வாரறி வாரெலாம்
வெண்டிங் கட்கண்ணி வேதிய னென்பரே. (48)

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருஇன்னம்பர் - திருக்குறுந்தொகை

என்னி லாருமெ னக்கினி யாரில்லை
யென்னி லுமினி யானொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே. (49)

[சிவதருமோத்தரம் - பரிகாரவியல் - 89-ம் திருவிருத்தம்]

உச்சிமுக மீசான மொளிதெளிய பளிங்கே
யுத்தரபூ ருவதிசையை நோக்கியுறு முகந்தே

நிச்சயித்த முகத்தின்கீழ்ப் பூர்வதிசை நோக்கி
நிகழுமுகந் தற்புருடங் கோங்கலர்போ னிறமே
யச்சுறுத்து மகோராமுக மறக்கரிது கால
மவிழ்தாடி வலத்தோளிற் றென்னோக்கி யமருஞ்
செச்சைநிறத் தெரிவைமுக மிடத்தோண்மேல் வாமஞ்
சிறுபுறத்தின் முகஞ்சத்தி யோசாதந் திகழ்பால். (50)

[அர்க்கியங் கொடுக்க]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

இரண்டாந் திருமுறை

திரிநனிபள்ளி - பண் - பியந்தைக்காந்தாரம்

தோடொரு காதனொடு மொருகா திலங்கு
சுரிசங்க நின்று புரளக்
காடிட மாகநின்று கனலாடு மெந்தை
யிடமாய காத லநகர்தான்
வீடுட னெய்துவார்கள் விதியென்று சென்று
வெறிநீர் தெளிப்ப விரலா
னூடுட னூடுசெம்மை யொலிவெள் ளமாரு
நனிபள்ளி போலு நமர்காள். (51)

[கோவணம்பாவனை சாத்த]

ஷெ சுவாமிகள் - மூன்றாந் திருமுறை

திருக்கொள்ளிக்காடு - பண் - காந்தார பஞ்சமம்

பாவண மேவுசொன் மாலையிற் பல
நாவணங் கொள்கையி னவின்ற செங்கைய
ராவணங் கொண்டெமை யாள்வ ராயினுங்
கோவணங் கொள்கையர் கொள்ளிக் காடரே. (52)

[கீள்பாவனை சாத்த]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருப்பராய்த்துறை - திருகுறுந்தொகை

பட்ட நெற்றியர் பான்மதிக் கீற்றினர்
நட்ட மாடுவர் நள்ளிரு ளேமமுஞ்
சிட்ட ஞர்தென் பராய்த்துறைச் செல்வஞர்
இட்ட மாயிருப் பாரைய றிவரே. (53)

[பரிவட்டஞ் சாத்த]

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருப்பருப்பதம் - திருநேரிசை

கட்டிட்ட தலைகையேந்திக் கனலெரி யாடிச்சீறிச்
சுட்டிட்ட நீறுபூசிச் சுடுபிணக் காடராகி
விட்டிட்ட வேட்கையார்க்கு வேறிருந் தருள்கள்செய்து
பட்டிட்ட வுடையராகிப் பருப்பத நோக்கிஞரே. (54)

[சந்தனஞ் சாத்த]

ஷை சுவாமிகள் - ஆருந் திருமுறை

திருக்கீழ்வேளூர் - திருத்தாண்டகம்

ஆளான வடியவர்கட் கன்பன் றன்னை
யானஞ்சு மாடியையநா னபயம்புக்க
தாளானைத் தன்ஞெப்பா ரில்லாதானைச்
சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்த
தோளானைத் தோளாத முத்தொப்பானைத்
தூவெளுத்த கோவணத்தை யரையிலார்த்த
கேளானைக் கீழ்வேளூ ராளுங்கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடிலாரே. (55)

[திருவாபரணஞ் சாத்த]

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் இரண்டாந் திருமுறை

திருக்கைச்சினம்-பண்-சீகாமரம்

மங்கையோர் கூறுடையான் மன்னு மறைபயின்றான்
அங்கையோர் வெண்டலையா னாடரவம் பூண்டுகந்தான்
திங்களொடு பாம்பணிந்த சீரார் திருமுடிமேற்
கங்கையி னான்மேவி யுறைகோயில் கைச்சினமே. (56)

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

தனித் திருத்தாண்டகம்

நின்னாவார் பிறரின்றி நீயேயானாய்
நினைப்பார்கண் மனத்துக்கோர் வித்துமானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுதமானாய்
மறைநான்கு மானாயா றங்கமானாய்
பொன்னானாய் மணியானாய் போகமானாய்
பூமிமேற் புகழ்தக்க பொருளேயுன்னை
யென்னானா யென்னானா யென்னினல்லா
லேழையே னென்சொல்லி யேத்துகேனே. (57)

[பூணூல் சாத்த]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - மூன்றாந் திருமுறை

திருநணா - பண் - காந்தாரம்

முத்தேர் நகையா ளிடமாகத் தன்மார்பில் வெண்ணூல் பூண்டு
தொத்தேர் மலர்சடையில் வைத்தா ரிடம்போலுஞ் சோலை சூழ்ந்த
வத்தே னளியுண் களியா லிசைமுரல் வாலத் தும்பி
தெத்தே யெனமுரலக் கேட்டார் வினைகெடுக்குந் திருநணாவே. ()

[புஷ்பாஞ்சலி]

திருநாவுக்கரசு சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருவையாறு - திருவிருத்தம்

நின்போ லமரர்க ணீண்முடி சாய்த்திறை மிர்த்துகுத்த
பைம்போ தழக்கிப் பவளந்த ழைப்பன பாங்கறியா
வென்போ லிகள்பறித் திட்டவி லையுமு கையுமெல்லா
மம்போ தெனக்கொள் ளுமைய னையாற னடித்தலமே. (59)

[இண்டை சாத்த]

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருவேகம்பம் - பண் - காந்தாரம்

அண்டமா யாதியா யருமறையோ டைம்பூதப்
பிண்டமா யுலகுக்கோர் மெய்ப்பொருளாம் பிஞ்ஞகனைத்
தொண்டர்தா மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற
இண்டைசேர் சடையானை யென்மனத்தே வைத்தேனே. (60)

[திருப்பள்ளித்தாமஞ் சாத்த]

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருப்பராய்த்துறை - திருக்குறுந்தொகை

போது தாதொடு கொண்டு புனைந்துடன்
தாத விழ்சடைச் சங்கரன் பாதத்துள்
வாதை தீர்க்கவென் றேத்திப் பராய்த்துறைச்
சோதி யானைத் தொழுதெழுந் துய்மினே. (61)

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்-இரண்டாந் திருமுறை

திருவேகம்பம் - பண் - இந்தளம்

நோச்சியே வன்னிகொன் றைமதி கூவிளம்
உச்சியே புனைதல்வே டம்விடை யூர்தியான்

கச்சியே கம்பமே யகறைக் கண்டனை
நச்சியே தொழுமினும் மேல்வினை யையுமே. (62)

[போகாங்கமூர்த்தி பூசைக்குத் தியானம்]

சிவதருமோத்தரம்-பரிகாரவியல் - 91-ம் விருத்தம்

திருவுருவந் தெளிபளிங்கு திரிநயனம் பிறையுஞ்
செரிசடையர் வலக்கரத்திற் றிரிசூலம் வாதங்
கருதுகமற் றையகரத்திற் செபமாலை யபையங்
காருணிகர்க் கீசானர்க் கவர்தமக்குக் கனிட்டர்
திருவுருவங் கோங்கினலர் திரிநயனங் காமுன்
செப்பியதே திருநாமந் தற்புருட தேவர்
வரியரவு மிளம்பிறையுஞ் சடைமுடியின் வைத்தார்
மலரடியை மறவாதார் வல்வினையை மாய்ப்பார். (63)

இதுவுமது-92-ம் விருத்தம்

கரியவுரு வெரியசடை கபால நிரைமாலை
காளமுகங் கவிழ்தாடி கண்மூன்று வட்டங்
காதலக மொருநான்குங் கட்டுரைத்த படியே
காட்டினமுன் னிருநான்கு காமுமுள ரென்றே
வெருவியிட மருவலரை வெருட்டியவுக் கிரத்து
விக்கிரக கோரமென விளம்புபெய ருடையார்
இருபதமு மொருபொழுது மறவாதே யேத்தி
யென்றுமவ ரிடர்வினையை யிடிப்பார்க ளென்றும். ()

இதுவுமது-93-ம் விருத்தம்

தேமொழியா ளுமையென்னத் திருமுகமுந் தோடுந்
திலதநுதற் சிறப்புமிரு ளளகவிதச் செறிவும்
வாமமெனுந் தேவர்க்கு வாய்த்தனவே செம்மை
வடிவுமவர் கரதலங்கன் றுதிதனில் வருப்பே

சேமவுருத் திகழ்சங்கஞ் சடாமுடியிற் பிறையுந்
திரிநயனங் கரதலங்கள் செப்பியமுற் படியே
நாமமது சத்தியோ சாதமென நவின்ற
நாதற்கு நயந்தவரை நினைக்கவினை நாசம். (65)

இதுவுமது - 94-ம் விருத்தம்

திருவுருவ மிருதயர்க்குத் தவளமெனத் தெளிக
சேடித்த வுறுப்பனைத்துஞ் செப்பியமுற் படியே
திருவுருவங் கனகமெனச் சிரத்தினுக்குத் தெளிக
சேடித்த வுறுப்பனைத்துஞ் செப்பியமுற் படியே
திருவுருவஞ் சிந்தூர மெனத்தெளிக சிகைக்குச்
சேடித்த வுறுப்பனைத்துஞ் செப்பியமுற் படியே
திருவுருவம் வண்டிநிறங் காளமுகங் கவசஞ்
சேடித்த வுறுப்பனைத்துஞ் செப்பியமுற் படியே. (66)

இதுவுமது - 95-ம் விருத்தம்

ஒவ்வொன்றே திருமுகமு நேத்திரங்கட் குணரி
லுடலொளியு மிரவிமதி யுதாசனனை யொக்கு
மிவ்விரண்டே காதலமும் வரம்பைய மவையு
மிவ்விரண்டே விழியுமென வெண்ணிடுக வெழிலார்
செவ்வரத்தந் திருவுருவங் கரதலமீ ரைந்துந்
திருநயன மொருமூன்றுஞ் சினத்திடித்த குரலு
மிவ்வகையெல் லாமுடைய ரத்திரரென் றியம்பு
மிவரடியை யிருதயத்தி னிருத்தினிட ரிலையே. (67)

[நிவேதனஞ் செய்ய]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருஏகம்பம் - பண் - தக்கேசி

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
யாதி யையம ரர்தொழு தேத்துஞ்

சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
யேல வார்குழ லாளுமை நங்கை
யென்று மேத்திவ ழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. (68)

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்-மூன்றாந் திருமுறை
திருவேகம்பம் - திருவிருக்குக்குறள் - பண் - கொல்லி

கலியார் கச்சி, மலியே கம்பம்
பலியார் போற்ற, நலியா வினையே. (69)

[அடைக்காம்பு]
திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை
திரும்புறம்பயம் - திருத்தாண்டகம்

அங்காந் தெஞ்சண்ட வந்திவண்ண
ரைந்தனையு மாசுணங்கொண் டம்பொற்றேண்மே
லேகாச மாயிட்டோன் றேந்திவந்
திதெதிருவே பலியென்றார்க் கில்லேபுக்கேன்
பாகேதுங் கொள்ளார்ப லியுங்கொள்ளார்
பாவியேன் கண்ணுள்ளே பற்றிநோக்கிப்
போகாத வேடத்தர் பூதஞ்சூழப்
புறம்பயநம் மூரென்று போயினாரே. (70)

[தூபம்]
திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - மூன்றாந் திருமுறை
திருக்கழிப்பாலை - பண் - கௌசிகம்

வெந்த தூங்கிலி யப்புகை விம்மவே
கந்த நின்றல வுங்கழிப் பாலையார்

அந்த மும்மள வும்மறி யாததோர்
சந்த மாலவர் மேவிய சந்தமே. (71)

[தீபம்]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவையாறு - திருத்தாண்டகம்

எல்லா வுலகமு மானாய் நீயே
யேகம்ப மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைக ளறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. (72)

ஷை சுவாமிகள் - மூன்றாந் திருமுறை

திருமறைக்காடு - திருத்தாண்டகம்

தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற வெளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லா
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் றானே. (73)

[திருநீறு சாத்த]

ஷை சுவாமிகள்-நான்காந் திருமுறை

நீறுமெய் பூசவல் லானு நினைப்பவர் நெஞ்சத்து ளானும்
ஏறுகந் தேறவல் லானு மெரிபுரை மேனியி னானு

நாறு கரந்தையி னானு நான்மறைக் கண்டத்தி னானும்
ஆறு சடைக்கரந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. (74)

[* தர்ப்பணந் தரிசிப்பிக்க]

ஷெ. சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருவாரூர் - திருவிருத்தம்

பூம்படி மக்கலம் பொற்படி மக்கல மென்றிவற்றா
லாம்படி மக்கல மாகிலு மாரூரி னிதமர்ந்தார்
தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலஞ் செய்து தொழுதுய் மடனெஞ்சமே. (75)

[ஜெபம் பண்ணினபிறகு அர்க்கியங் கொடுக்க]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருப்பாண்டிக்கொடுமுடி - பண் - பழம்பஞ்சுரம்

இட்டனும்படி யேத்துவாரிசைந் திட்டநாண்மறந் திட்டநாள்
கெட்டநாளிவை யென்றலாற்கரு தேன்கிளர்புனற் காவிரி
வட்டவாசிகை கொண்டடிதொழு தேத்துபாண்டிக் கொடுமுடி
நட்டவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநாநமச் சிவாயவே. (76)

[குருவர்ச்சனையுள்வணக்கம்]

ஷெ. சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருக்காளத்தி - பண் - நட்டராகம்

மறிசேர் கையினனே மத மாவுரி போர்த்தவனே
குறியே யென்னுடைய குரு வேயுன்குற் றேவல்செய்வே
னெறியே நின்றடியார் நினைக் குந்திருக் காளத்தியுள்
அறிவே யன்னையல்லா லறிந் தேத்த மாட்டேனே. (77)

* தர்ப்பண மென்பது கண்ணாடி.

[அருச்சனை செய்ய]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - முதற் றிருமுறை

திருப்பாம்புரம் - பண் - தக்கராகம்

கோக்கிறகோடு கூவிளமத்தங் கொன்றையொ டெருக்கணி சடை
அக்கினொடாமை பூண்டழகாகவனலது வாடுமெம்மடிகண் [யர்
மிக்கநல் வேத வேள்வியு ளெங்கும் விண்ணவர் விரைமலர் தூவப்
பக்கம்பல் பூதம் பாடிட வருவார் பாம்புர நன்னக ராரே. (78)

ஷை சுவாமிகள் - முதற் றிருமுறை

அச்சிறுபாக்கம் - பண் - குறிஞ்சி

ஏறுமொன் றேறி நீறுமெய் பூசி
யிளங்கிளை யரிவையோ டொருங்குட னாகிக்
கூறுமொன் றருளிக் கொன்றையந் தாருங்
குளிரிள மதியமுங் கூவிள மலரு
நாறுமல் லிகையு மெருக்கொடு முருக்கு
மகிழிள வன்னியு மிவைநலம் பகர
வாறுமோர் சடைமே லணிந்தவெம் மடிக
ளச்சிறு பாக்கம தாட்சிகொண் டாரே. (79)

ஷை சுவாமிகள் - இரண்டாந் திருமுறை

திருப்புள்ளிருக்கும்வேளூர் - பண் - சீகாமரம்

வாசநலஞ் செய்திமையோர் நாடோறு மலர்தூவ
வீசனெம் பெருமானு ரினிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளு மொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கும் வேளூரே. (80)

[திருமந்திரம்]

அப்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்
வம்பவிழ் பூசமு மாதவி மந்தாரங்

தும்பை வகுளஞ் சாபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே. (81)

[எழுந்து நம்பிட]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - முதற் திருமுறை

திருவாரூர்ப் பசுபதீச்சரம் - பண் - நட்டபாடை

நற்றமறத்தார் குணத்தினுள்ளார் கும்பிடுவார்தமக்
 கன்புசெய்வார்
ஒற்றைவிடையினர் நெற்றிக்கண்ணு றுறைபதியாகுஞ்
 செறிகொள்மாடஞ்
சுற்றியவாசலின் மாதர்விழாச்சொற் கவிபாடநி
 தானநல்கப்
பற்றியகையினர் வாழுமாரூர்ப் பசுபதீச்சரம்
 பாடுநாவே. (82)

[பிரதக்ஷணஞ் செய்ய]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவாரூர் - திருத்தாண்டகம்

மதிதருவாய் நெஞ்சமே யுஞ்சுபோக
 வழியாவ திதகண்டாய் வானோர்க்கெல்லாம்
அதிபதியே யாரமுதே யாதியென்று
 மம்மானே யாரூரெம் மையாவென்றுந்
துதிசெய்து நின்றுமலர் கொண்டுதூவிச்
 சூழும்வ லஞ்செய்து தொண்டுபாடிக்
கதிர்மதிசேர் சென்னியனே காலகால
 கற்பகமே யென்றென்றே கதறுநில்லே. (83)

[ஜெபித்துச் சாத்த]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருவாரூர் - பண் - புறநீர்மை

அந்தியு நண்பகலு மஞ்சுப தஞ்சொல்லி
முந்தியெ ழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தைப ராமரியாத் தென்றிரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை யென்றுகொ லெய்துவதே. (84)

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை

கருவ னேகரு வாய்த்தெளி வார்க்கெலாம்
ஒருவ னேயுயிர்ப் பாயுணர் வாய்நின்ற
திருவ னேதிரு வீழிமி ழலையுட்
குருவ னேயடி யேனைக்கு றிக்கொளே. (85)

[ஆநந்தத்தால் கூத்தாடல்]

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

கோயிற்றிருநேரிசை - பண் - கொல்லி

பார்த்திருந் தடிய னேனுன் பரவுவன் பாடி யாடி
மூர்த்தியே யென்ப னுன்னை மூவரில் முதல்வ னென்பன்
ஏத்துவா ரிடர்க டீர்ப்பாய் தில்லைச்சிற் றம்ப லத்துக்
கூத்தாவுன் கூத்துக் காண்பான் கூடநான் வந்த வாறே. (86)

[நமஸ்காரஞ் பண்ணுவதற்குமுன் செய்யுந் துதி]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருப்புன்கூர் - பண் - தக்கேசி

இயக்கர் கின்னரர் யமனொடு வருண
ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள்

மயக்க மில்புலி வானர நாகம்
வசக்கள் வானவர் தானவ ரெல்லாம்
அயர்ப்போன் றின்றிநின் திருவடி யதனை
யர்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு
திகைப்போன் றின்றிநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (87)

[நமஸ்காரஞ் செய்ய]

திருநாவுக்கரசு சுவாமிகள் - நான்காந் திருமுறை

தனித் திருநேரிசை

அங்கத்தை மண்ணுக் காக்கி யார்வத்தை யுனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதனா ளாயே னுன்னை
யெங்குற்ற யென்ற போதா லிங்குற்றே னென்கண் டாயே. (88)

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

ஞானத் தாற்றொழு வார்சில ஞானிகள்
ஞானத் தாற்றொழு வேனுனை நானலேன்
ஞானத் தாற்றொழு வார்கடொ ழக்கண்டு
ஞானத் தாலுனை நானுந்தொ ழுவனே. (89)

ஷை

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சந்
தாழ்க்கச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே. (90)

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருமருகல் - திருக்குறுந்தொகை

பெருக லாந்தவம் பேதைமை தீரலாந்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே. (91)

[நமஸ்காரஞ் செய்து எழுந்திருக்கும்போது துதிக்க]

ஷை சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை

திருக்கடம்பூர் - திருக்குறுந்தொகை

பொய்தொ ழாதுபு லியுரி யோன்பணி
செய்தெ ழாவெழு வார்பணி செய்தெழா
வைதெ ழாதெழு வாரவ ரெள்கநீர்
கைதொ ழாவெழு மின்கரக் கோயிலே. (92)

[தோத்திரஞ் செய்ய]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - முதற் றிருமுறை

திருவலிவலம் - பண் - பழந்தக்கராகம்

தாயுநீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின்பா லன்புசெய்வா னுதரிக்கின் றதுள்ளம்
மாயமாய காயந்தன்னு ளைவர்நின்றொன் றலொட்டார்
மாயமேயென் றஞ்சுகின்றேன் வலிவல மேயவனே. (93)

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஆறாந் திருமுறை

தனித் திருத்தாண்டகம்

அப்பனீ யம்மைநீ யையனுநீ
யன்புடை மாமனு மாமியுநீ

யொப்புடைய மாதரு மொண்பொருளுநீ
யொருகுலமுஞ் சுற்றமு மோரூருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாயென் னெஞ்சந் துறப்பிப்பாய்நீ
யிப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத்துநீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வனீயே. (94)

ஷை சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவாவடுதுறை - திருத்தாண்டகம்

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
வுருவேயென் னுறவேயென் னூனே யூனி
னுள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணின்
கருமணியே மணியாடு பாவாய் காவா
யருவாய வல்வினைநோ யடையா வண்ண
மாவடுதண் டுறையுறையு மமர ரேறே. (95)

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருக்கடவூர் - திருநேரிசை

பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரி றைத்து
வழியிடை வாழ மாட்டேன் மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை யைவரா லலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர்வீ ரட்ட னீரே. (96)

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருவதிகைத்திருவீரட்டானம் - திருநேரிசை

கழித்திலேன் காம வெந்நோய் காதன்மை யென்னும் பாசம்
ஒழித்திலே னூன்க ணோக்கி யுணர்வெனு மிமைதி றந்து

விழித்திலேன் வெளிறு தோன்ற வினையெனுஞ் சரக்குக் கொண்
அழித்திலே னயர்ந்து போனே னதிகைவீ ரட்ட னாரே. [டேன்

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருக்கோடிகா - திருநேரிசை

கேழல்வெண் கொம்பு பூண்ட கிளரொளி மார்பி னானே
யேழையே னேழை யேனா னென்செய்கே னெந்தை பெம்மான்
மாழையொண் கண்ணி னார்கள் வலைதனில் மயங்கு கின்றேன்
கூழையே றுடைய செல்வா கோடிகா வுடைய கோவே. (98)

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே. ()

ஷை சுவாமிகள் - நான்காந் திருமுறை

கோயில் திருவிருத்தம் - பண் - கொல்லி

படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்செ னாவிற்கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக் காட்செய்கின்றேன்
அடைக்கினும் போகேன் றொழுதுவ ணங்கித்து நீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம் பலத்தானே. (100)

ஷை சுவாமிகள் - ஆறாந் திருமுறை

திருவாரூர் - போற்றித் திருத்தாண்டகம்

சங்கரனே நின்பாதம் போற்றிபோற்றி
சதாசிவனே நின்பாதம் போற்றிபோற்றி

பொங்காவா நின்பாதம் போற்றிபோற்றி
புண்ணியனே நின்பாதம் போற்றிபோற்றி
யங்கமலத் தயனோடு மாலுங்காணா
வனலுருவா நின்பாதம் போற்றிபோற்றி
செங்கமலத் திருப்பாதம் போற்றிபோற்றி
திருமூலத் தானனே போற்றிபோற்றி. (101)

சுந்தரமூர்த்தி சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருவிடைமருதூர் - பண் - தக்கேசி

கொடுக்க கிற்றிலே னொண்பொரு டன்னைக்
குற்றஞ்செற்ற மிவைமுதலாக
விடுக்க கிற்றிலேன் வேட்கையுஞ் சினமும்
வேண்டிலைம்புல னென்வசமல்ல
நடுக்க முற்றதோர் மூப்புவந் தெய்தி
நமன்றமர்நா கத்திடலஞ்சி
யிடுக்க ணுற்றன னுய்வகை யருளா
யிடைமருதுறை யெந்தைபிரானே. (102)

ஷை சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருமழபாடி - பண் - நட்டராகம்

பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றையணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
யன்னே யுன்னையல்லா லினி யாரைநி னைக்கேனே. (103)

ஷை சுவாமிகள் - ஏழாந் திருமுறை

திருக்கடவூர்-பண்-நட்டராகம்

மண்ணீர் தீவெளிகால் வரு பூதங்க ளாகிமற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிற வாவுரு வானவனே

கண்ணா ருண்மணியே கட வூர்தனுள்வீ ரட்டத்தெம்
அண்ணா வென்னமுதே யெனக் கார்துணை நீயலதே. (104)

ஷ்டி சுவாமிகள் - ஏழாந் திருமுறை
திருவாவடுதுறை - பண் - தக்கேசி

ஒப்பி லாமுலை யாளொரு பாகா
வுத்த மாமத்த மார்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே
மூவ ருக்கருள் செய்யவல் லானே
செப்ப வானிழற் கீழிருந் தருளுஞ்
செல்வ னேதிரு வாவடு துறையுள்
அப்ப னேயெனை யஞ்சலென் றருளா
யாரெ னக்குற வமரர்க ளேறே. (105)

துருவி லாநிறை வேகுணக் குன்றே
கூத்த னேகுழைக் காதுடை யானே
யுறவி லேனுனை யன்றிமற் றடியே
ஞெருபி ழைபொறுத் தாலிழி வுண்டோ
சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச்
செம்பொ னேதிரு வாவடு துறையுள்
அறவ னேயெனை யஞ்சலென் றருளா
யாரெ னக்குற வமரர்க ளேறே. (106)

எட்டாந் திருமுறை - திருவாசகம்
திருச்சதகம் - 97-ம் பாசுரம்

உடைய நாதனே போற்றி நின்னலாற்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
யுடைய னேபணி போற்றி யும்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினும்

கடைய னாயினேன் போற்றி யென்பெருங்
கருணை யாளனே போற்றி யென்னைநின்
னடிய னாக்கினாய் போற்றி யாதியு
மந்த மாயினாய் போற்றி யப்பனே. (107)

அடைக்கலப்பத்து - 8-ம் பாசுரம்

மாவடு வகிரன்ன கண்ணிபங் காநின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேயிடு வாய்நின் குறிப்பறியேன்
பாவிடை யாடுகு ழல்போற் கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடு வேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. (108)

குழைத்தபத்து - 7-ம் பாசுரம்

அன்றே யென்ற னாவியு
முடலு முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ
வெண்டோண் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ விதற்கு நாயகமே. (109)

ஒன்பதாந் திருமுறை - (கருவூர்த்தேவர்) திருவிசைப்பா
திருச்சாட்டியக்குடி - பண் - பஞ்சமம்

சேக்கனா போற்றி திசைமுகா போற்றி
சிவபுர நகருள்வீற் றிருந்த
அக்கனா போற்றி யமரனே போற்றி
யமரர்க டலைவனே போற்றி
தக்கணன் மறைநூல் சகலமுங் கற்றோர்
சாட்டியக் குடியிருந் தருளும்

எங்களை பகனே போற்றியே மிருக்கை
யிறைவனே போற்றியே போற்றி. (110)

சேந்தனார் - திருப்பல்லாண்டு

பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கட லீந்தபிரான்
மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன் மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கு மந்தணர் வாழ்கின்ற சிற்றம் பலமே யிடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே பல்லாண்டு கூறுதுமே. ()

பத்தாந் திருமுறை - திருமந்திரம்

போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகழ் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேனறை யோசிவ யோகத்தைப்
போற்றுகின் றேனெம் பிரானென் றுநானே. (112)

பதினோராந் திருமுறை

காரைக்காலம்மையார் - அற்புதத்திருவந்தாதி

81 - ம் பாசுரம்

காலனையும் வென்றோங் கடுநரகங் கைகழன்றோம்
மேலை யிருவினையும் வேரறுத்தோம்—கோல
அரணா விந்தழிய வெந்தீயம் பெய்தான்
சரணா விந்தங்கள் சார்ந்து. (113)

ஷை திருமுறை - ஐயடிகள் காடவர்கோனயனார்
அருளிச்செய்த க்ஷேத்திர வெண்பா

20 - ம் பாசுரம்

என்னெஞ்சே யுன்னை யிரந்து முரைக்கின்றேன்
கன்னெஞ்சேய் வாயாகிற் காலத்தால்—வன்னஞ்சேய்
மாகம்பத் தானை யுரித்தானை வண்கச்சி
யேகம்பத் தானை யிறைஞ்சு. (114)

## ௧௧-ம் திருமுறை - சேரமான்பெருமாணாயனார் அருளிச்செய்த பொன்வண்ணத்தந்தாதி

### 91 - ம் பாசுரம்

கோற்றவ னேயென்றுங் கோவணத் தாயென்று மாவணத்தால்
ஏற்றவ னேயென்று நஞ்சுண்டி யேயென்று மஞ்சமைக்கப்
பெற்றவ னேயென்றும் பிஞ்ஞக னேயென்று மன்மதனைச்
செற்றவ னேயென்று நாளும்ப ரவுமென் சிந்தனையே. (115)

## பட்டணத்துப்பிள்ளையா ரருளிச்செய்த திருவெண்காட்டுத் திருவிசைப்பா.

பூதமுங் கரணம் பொறிகளும் புலனும்
பொருந்திய குணங்களோர் மூன்றும்
நாதமுங் கடந்த வெளியிலே நீயு
நானுமாய் நிற்குநா ளுளதோ
வாதமுஞ் சமய பேதமுங் கடந்த
மனோலய வின்பசா கரனே
ஏதுமொன் றறியேன் யாதுநின் செயலே
யிறைவனே யேகநா யகனே. (116)

யாவரே யிருந்தும் யாவரே வாழ்ந்தும்
யாவரே யெமக்குற வாயும்
தேவரீ ரல்லாற் றிசைமுக மெனக்குத்
திருவுள மறியவே றுளதோ
பாவலா ரொருவன் செந்தமிழ்க் கிரங்கிப்
பாவையா ருடலை மாற்ற
ஏவலா ளாகி யிரவெலா முழன்ற
விறைவனே யேகநா யகனே. (117)

உண்டதே யுண்டு முடுத்ததே யுடுத்து
வடுத்தடுத் துரைத்ததே யுரைத்தும்
கண்டதே கண்டுங் கேட்டதே கேட்டுங்
கழிந்தன கடவுநா ளெல்லாம்
விண்டதா மரைமே லன்னம்வீற் றிருக்கும்
விழிவளு வீதிவெண் காடா
அண்டரே போற்ற வம்பலத் தாடு
மையனே யுய்யுமா றருளே. (118)

பன்னிரண்டாந் திருமுறை - பெரியபுராணம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். (119)

கோயிற்புராணம் - பாயிரம்
3 - ம் பாயிரம்

தற்பரமாய்ப் பரபதமாய் தாவிலனு பூதியதாய்
அற்புதமா யாரமுதா யானந்த நிலயவொளிப்
பொற்பினதாய்ப் பிறிவிலதாய்ப் பொருளாகி யருளாகுஞ்
சிற்பரமா மம்பரமாந் திருச்சிற்றம் பலம்போற்றி. (120)

[ஓமத்துக்குப்பின் உபயகாலபூசை போகாங்கழர்த்தி]
முதலியோர்க்குப் பராமுகங் கோடுத்துக் கூட்டி
ஜெபஞ் சாத்தினபின் துதி]

திருநாவுக்கரசு சுவாமிகள் - ஐந்தாந் திருமுறை
திருக்கடம்பந்துறை - திருக்குறுந்தொகை

பூமென் கோதையு மையொரு பாகனை
யோமஞ் செய்துமு ணர்மின்க ளுள்ளத்தாற்

காமற் காய்ந்தபி ரான்கடம் பந்தறை
நாம மேத்தநந் தீவினை நாசமே. (121)

[உடையவரை பேட்டகக் கோயிலில் எழுந்தருளப்பண்ண]

அப்பர் சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருவேகம்பம் - பண் - காந்தாரம்

கைப்போது மலர் தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
யப்போது மலர் தூவி யைம்புலனு மகத்தடக்கி
யெப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே. ()

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்-இரண்டாந்திருமுறை

திருக்குடவாயில் - பண் - காந்தாரம்

அடியார்ந்த பைங்கழலுஞ் சிலம்புமார்ப்ப வங்கையிற்
செடியார்ந்த வெண்டலையொன் றேந்தியுலகம் பலிதேர்வீர்
குடியார்ந்த மாமறையோர் குலாவியேத்துங் குடவாயிற்
படியார்ந்த கோயிலே கோயிலாகப் பயின்றீரே. (123)

[சண்டேசுர பூசை]

திருநாவுக்கரசு சுவாமிகள் - நான்காந் திருமுறை

திருக்குறுக்கை திருநேரிசை

தழைத்ததோ ராத்தி யின்கீழ்த் தாபர மணலாற் கூப்பி
யழைத்தங்கே யாவின் பாலைக் கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் றாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோ ரமுத மீந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. (124)

[பேட்டகக்கோயில் சாத்த]

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் - இரண்டாந் திருமுறை

திருமறைக்காடு - பண் - இந்தளம்

சதுரம் மறைதான் றுதிசெய்து வணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
விதுநன் கிறைவைத் தருள்செய்த வெனக்குன்
கதவந் திருக்காப் புக்கொள்ளுங் கருத்தாலே. (125)

திருச்சிற்றம்பலம்

## சிவபூஜைத் திரட்டு முற்றிற்று.



# பின்பு சாந்திநிமித்தம்

[அகோர மந்திரம் ஜெபித்து
இயன்ற ஸ்தோத்திரம் பண்ணுக]

பட்டணத்துப்பிள்ளையார் பாடல்

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்றெண்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழு [ணப்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசை யெவ்வாறு கொள்வாய் வினைதீர்த்தவனே. (1)

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங்க சிந்துருகி
நில்லாப் பிழையு நினையாப் பிழையுநின் னஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையுந் துதியாப் பிழையுந்தொ ழாப்பிழையு
மெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி யேகம்பனே. (2)

சொல்லால் வருங்குற்றம் சிந்தனை யால்வருந் தோடஞ்செய்த
பொல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குக ளாயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி யேகம்பனே. (3)

கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவினும்பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே. (4)

நீரூர்த்த மேனிய ரோமஞ் சிலிர்த்துள நெக்குநெக்குச்
சேருய்க் கசிந்து கசிந்தே யுருகிநின் சீரடிக்கே
மாருத் தியானமுற் ருனந்த மேற்கொண்டு மார்பிற்கண்ணீர்
ஆருய்ப் பெருகக் கிடப்பதென் ருேகயி லாயத்தனே. (5)

நல்லா யெனக்கு மனுவொன்று தந்தருண் ஞானமிலாப்
பொல்லா வெனைக்கொன்று போதும் பொழுதியல் பூசைசெபஞ்
சொல்லார் நற்கோயி னியமம் பலவகைத் தோத்திரமு
மெல்லா முடிந்தபின் கொல்லுகண் டாய்கச்சி யேகம்பனே. (6)

ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி யறிவழிந்து
மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே. (7)

நன்ருரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் ஞர்தப்பினுற்
றன்ருலு மாடிச் சலித்திடு மோவந்தத் தன்மையைப்போ
லுன்ருலி யானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தா
லென்ருலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே. (8)

அஞ்சருளைப் போற்றி யைந்துபுல னைத்துறக்க
நெஞ்சே யுனக்கு நினைவுநான் சொல்லுகிறேன்
வஞ்சகத்தை நீக்கி மறுநினைவு வாராமல்
செஞ்சரணத் தாளைச் சிந்தைசெய்வாய் நெஞ்சமே. (9)

திருச்சிற்றம்பலம்

முற்றும்.

---

உ

சிவமயம்

# தேவார விளக்கம்

திருவூறல் விளநகர்நெல் வேலிவலி தாயஞ்
சேஞலூர் கொடிமாடச் செங்குன்றூர் வியலூர்
கருவூர்ப்பாற் றுறைமூக்கீச் சரங்கள்ளில் கொள்ளிக்
காடுகச்சி நெறிக்காரைக் காடுவேற் காடு
திருவாரூர்ப் பசுபதீச் சரங்காட்டுப் பள்ளி
சிக்கல்சக்க ரப்பள்ளி யகத்தியான் பள்ளி
காவீர நெல்வாயில் வல்லமுல்லை வாயில்
காறாயில் கொடுங்குன்ற நெடுங்களம்வக் கரையே. (1)

அறையணிநல் லூர்பழுவூர் மீயச்சூர் தேங்கூ
ராப்பனூர் கலிக்காமூர் மயிலாப்பூ ரழுந்தூர்
பறியலூர் பெரும்புலியூ ரெருக்கத்தம் புலியூர்
பாம்புரஞ்சோ புரந்தரும புரமோத்தூர் பனந்தாள்
சிறுகுடிவிற் குடிவீரட் டம்நண்ணுத் திருந்து
தேவன்குடி கருக்குடிவேட் டக்குடிசிற் றேமம்
புறவார்ப னங்காட்டூர் நெல்லிக்கா வைகாப்
புள்ளமங்கை சாத்தமங்கை கொள்ளம்பு தூரே. (2)

பருதிநிய மந்தலைச்செங் காடிந்த்ர நீலப்
பருப்பதங்கண் ணார்கோயி லாதைப்பெரும் பாழி
பெருமணமச் சிறுபாக்கந் திருக்கச்சினமம்பர்ப் [யோ
பெருந்திருக்கோ யில்பேணு பெருந்துறைவெண் டுறை
டாரசிவிதென் குடித்திட்டை களர்வடகூர் கோட்டூ
ரனேகதங்கா பதம்விளம ரேடகமா டானை
திருவிரும்பை மாகாளங் குடந்தைக்கா ரோணந்
தெளிச்சேரி மதிமுத்த மிராமனதீச் சரமே. (3)

வடகரைமாந் துறையிடும்பா வனமுசாத் தான
மாணிகுழி கோணமா மலையீங்கோய் மலையே
சடைமுடிபட் டீச்சரம்விற் கோலமா கறல்வை
கன்மாடக் கோயின்மயேந் திரப்பளிநெல் வெண்ணை
வடகரைநற் குரங்காடு துறைபுகலூர் வர்த்த
மானீச்ச ரம்நாலூர் மயானமிரும் பூளை
நெடியகுரங் கணிமுட்ட மிடைச்சுரந்தண் டலைநீ
ணெறியிலம் பயங்கோட்டூர் பாதளீச் சரமே. (4)

கோலக்கடிக் குளமிவைக்குப் பிள்ளையார் கூறுங்
கோளின்மெய்ப் பதிகங்க ளோவ்வொன்றே பயற்றூர்
பாலைத்துறை கடம்பந்துறை பள்ளியின்முக் கூடல்
பழையாறை வடதளிமுண் டீச்சரம்வாட் போக்கி
நீலக்குடி மியங்கூ ரிளங்கோயில் வன்னியூர்
நிகழ்கடுவாய்க் கரைப்புத்தூர் பேரெயில்கன் றாப்பூ
ராலம்பொழில் கொட்டையூர் குடந்தைக்கீழ்க் கோட்ட
மாப்பாடி குரக்குக்காத் தலையாலங் காடே. (5)

கருவிலிவன் கஞ்சனூர் பூவனூர் மேலோர்
கருதுசத்தி முற்றமிவை கட்குநா வாச
ருரைசெய்தருள் திருப்பதிக மோவ்வொன்றே சுழிய
லோணகாந் தன்றளிகச் சூராலக் கோயில்
பரவையுண்மண் டளிகச்சி யனேகதங்கா பதம்வெண்
பாக்கம்பார்த் தான்பனங்காட் டூர்துறையூர் நீடூர்
திருமுருகன் பூண்டியஞ்சைக் களங்கலைய நல்லூர்
தினைநகர்நன் னிலத்துப்பெருங் கோயிலிடை யாறே. (6)

வெண்ணைநல்லூர் நாட்டியத்தான் குடிகோடிக் குழகர்
வெஞ்சமாக் கூடறிருக் கானாட்டு முள்ளூர்
மண்ணிப்படிக் கரையெதிர்கொள் பாடிவட முல்லை
வாயில்திருக் கூடலையாற் றூர்நாவ லூரோ

ெண்மையரு ளவிருசி யிவைக்கூரர் பதிக
மோவ்வொன்றே யிரண்டுபெற்ற பதியுரைக்கிற் றேவூர்
வண்மையுள பல்லவனீச் சரந்திருக்கோட் டாறு
வளர்குற்றா லங்குடவா யிற்பதிக்கு மன்னோ. (7)

பிள்ளையா ரருள்பதிக மிவ்விரண்டே யிப்பாற்
பேணியவா ரூரிலா னெறிகொண்டீச் சரத்தோ
டெறும்பி யூர்குழுக்கைக் கிவ்விரண்டே பதிக
முரைத்தனர்நா வுக்கரசர் திருவோமாம் புலியூர்
தெள்ளியகோ ழம்பமணஞ் சேரிநல்லம் ஆக்கூர்
சிராப்பள்ளி பெருவேளூர் கீழ்வேளூர் கானூர்
வெள்ளைவிடை யோன்விசைய மங்கைதிருப் புத்தூர்
விளங்கியமே லைக்காட்டுப் பள்ளிகுட மூக்கே. (8)

திருவேதி குடிபாய்த் துறைகோவ லூர்பா
திரிப்புலியூ ரவளிவணல் லூர்பந்தணை நல்லூர்
கருகாவூ ரன்பிலா லந்துறைகோ காணங்
கண்டியூர் தூங்கானை மாடம்வேட் களமே
யரியருங் காடுதுறை திருமங்கலக் குடியோ
ரன்னியூ ரிவைக்குச்சம் பந்தர்நா வரச
ருரைசெய்தருள் பதிகமோவ் வொன்றுகருப் பறிய
லூர்தானைப் பேர்வேள்விக் குடிகுருகா வூரே. (9)

பனையூர்கே தாரம்பரங் குன்றங்கோ லக்காப்
பாச்சிலாச் சிராமங்கே தீச்சரம்வின் பணியும்
புனவாயி லிவைக்குச்சம் பந்தரா ரூரர்
புகல்பதிக மோவ்வொன்று கச்சிமேற் றளிக்கு
முன்மாச ராரூரர் திருப்பதிக மோவ்வொன்று
மொழிந்தனரிப் பான்மூன்று பெறுபதிகண் மொழியி
னிவைவரிய வம்பர்மா காளப்பூந் தருத்தி
கிராளிறைசம் பந்தரப்பர் நிகழ்த்தினர்மும் மூன்றே. (10)

மருகன்மயி லாடுதுறை திருவீரா மீச்சரம்
வான்மியூர் செங்காட்டங் குடிவளரைந் திற்கு
முருகுபந்த ரிரண்டாச ரொன்றுதிருப் பதிக
முரைத்தனர்பா சூர்கடம்பூர் புள்ளிருக்கும் வேளூர்
திருவாய்மூர் வெண்ணிசெம்பொன் பள்ளிதிருச் சேறை
திகழுமே ழினுக்குப்பந் தரொன்றாச ரிரண்டே
யொருவிலா வாழ்கொளிபுத் தூர்க்குச்சம் பந்தர்
புகன்றதிரண் டேரொன்று புறம்பியம்வாஞ் சியமே. (11)

அரத்துறைபுன் கூர்பாண்டிக் கொடுமுடிபைஞ் ஞீலி
யரிசிற்கரைப் புத்தூர்நற் கடவூரின் மயானந்
துருத்திதிரு நனிபள்ளி கற்குடிமா மலைதான்
சுருதிகலை தோத்திரஞ்செய் துகளில்கழுக் குன்றம்
பருப்பதம்பன் மூன்றினுக்கு மூவருமொவ் வொன்று
பகர்ந்தனரிப் பாஞன்கார் பதிமுதலாம் பதியிற்
றிருத்திகழ்மூ வர்கள்பதிக முறையேயெண் ணிடுவன்
சிவனடியா ரடிபரவித் தெறிந்தறிந்த வாறே. (12)

வலம்புரங்கோ ளிலியாலங் காடொன்றிரண் டொன்றே
வலிவலங்கா ளத்திபூ வணமிரண்டொன் றொன்று
மிலங்குசாய்க் காடதற்கு ஞானசம் பந்த
ரியனாவுக் கரசர்திருப் பதிகமிரண் டிரண்டே
வலங்கொணின்றி யூர்க்கொன்றொன் றிரண்டுசிவ புரமாம்
வளநகர்க்குப் பிள்ளையார் மூன்றாச ரொன்றே
நலங்கிளருங் கோடிகா நகரினுக்கவ் விருவர்
நவின்றதொன்று மூன்றாகு நற்பதிகந் தானே. (13)

நறையூர்ச்சித் தீச்சரஞ்சம் பந்தர்மூன் றாரர்
நவின்றதொன்று வலஞ்சுழிநல் லூர்நாரை யூர்க்குக்
குறைவிலாச் சம்பந்தர் மூன்றாச ரிரண்டே
கூறியவின் னம்பருக்கங் கவர்களொன்று நான்கா

மறையவன்றா மலைநகர்க்கு மவ்விருவர் தாமே
யருள்செய்த விரண்டுமூன் றாகுமரு ளாரு
மிறையறையு மாமாத்தூர்க் கிரண்டிரண்டொன் றாகு
மெழிற்கடவூ ரதனுக்கோன் றியன்மூன்றொன் றாமே. (14)

மழபாடி வெண்காடு மூன்றிரண்டொன் றாகு
மன்னுநா கேச்சரத்துக் கிரண்டுமூன் றொன்றே
பழனம்நெய்த் தானமொன் றைந்துபந்த ரப்பர்
பகர்மாற்பே றதற்கவர்க ளிரண்டுநான் காகு
மொழிசோற்றுத் துறைக்கொன்று நான்கொன்றா னைக்கா
மூன்றுமூன் றொன்றுநள் ளாறுநான் கிரண்டொன்
றழகாரும் கயிலாய மிரண்டுநான் கொன்றா
மணிநாகைக் கிரண்டுநான் கிரண்டாக வறையே. (15)

பூதமுகலூர் கழிப்பாலைக் கிரண்டஞ்சொன் றொற்றி
யூரதற்பதியா வடுதுறைக்கோன் றஞ்சிரண்டெல் லோர்க்குங்
கதியளிக்கு மறைக்காடு நான்கஞ்சொன் றாகுங்
கடிமிலங்கு தில்லைநகர்க் கிரண்டெட்டொன் றாமே
முதுகுன்றக் கேழொன்று மூன்றமது ரைக்கு
மொழிபந்த ரொன்பதப்ப ரிரண்டேகம் பத்துக்
கதிகமா நான்கேழொன் றிடைமருதா றஞ்சொன்
றையாற்றுக் கஞ்சுபன்னி ரண்டொன்றா மன்றே. (16)

வாழநிலைக் கொன்றுபதி னாறடனொன் றாகும்
வளர்வீழிக் கொருபதினைந் தெட்டொன்றா ரூர்க்குத்
தாழ்வில்லா வைந்திருபத் தொன்றுடனெட் டழகே
தருகாழிக் கறுபத்தேழ் மூன்றொன்றே மூவ
ராழிசூழ் பதிகளிரு நூற்றெழுபா னொன்குக்
கருள்பதிக மெழுநூற்று நாற்பத்தோன் பானே
டேழ்முப்பத் தேழ்நான்கு பொதுப்பதிக மாக
வெழுநூற்றுத் தொண்ணூற்றே ழிசைப்பதிகந் தானே. (17)

தேவாரவிளக்கம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

---

சிவமயம்

# சிவபூஜைத்திரட்டின்
# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

சிவபூஜைத்திரட்டின்

செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.

---

THIRD EDITION] [1000 COPIES

அரிச்சந்திர புராண வசனம்: அரிச்சந்திர புராண மூலத்தை அநுசரித்துத் தமிழில் நூதனமாக வசனப்படுத்தப்பட்ட அரிய நூல்; இனிய நடையில் கதை விரிவாக அமைந்தது: விலை ரூபா 1-8-0

---

அருணாசல புராண வசனம்: அடியார்களின் பாவத்தைப் போக்கும் திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேசுவரரின்மீது பாடப்பட்டுள்ள மேற்படி புராணத்தின் கருத்தை எல்லோரும் எளிதில் அறிந்துணருமாறு, இனிய நடையில் வசன ரூபமாக இயற்றப்பெற்றது: விலை ரூபா 1

---

பிரபோத சந்திரோதய வசனம் என்னும் மெய்ஞ்ஞான விளக்கம்: விலை ரூபா 1

---

பிரபுலிங்கலீலை வசனம்: கவிச் சக்ரவர்த்தியாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச ஸ்வாமிகளியற்றிய அரிய நூலின் தமிழ் வசனம்: விலை ரூபா 1

---

ஸ்ரீ பக்தலீலாம்ருத வசனம்: 82 பக்தர்களின் திவ்விய சரித்திரம்: விலை ரூபா 3

---

வேதப்பொருள் விளக்கம்: ருக் யஜுர், சாம, அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களிலுள்ள முக்கிய விஷயங்கள் அடங்கியது: விலை அணா 12. வேதப்பொருள் சாரசங்கிரகம்: அணா 4

---

பட்டினத்துப் பிள்ளையார் என்னும் திருவெண்காட்டடிகள் சரித்திரம் (வசனம்): விலை அணா 12

---

ஸ்ரீ பகவத்கீதை வசனம்: ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசித்த திவ்ய கீதையின் தமிழ் வசனம்: ரூபா 1-8-0

---

சைவசமய விளக்க வினாவிடையும், சைவசமய ஆசௌச வினாவிடையும்: விலை அணா 8

---

வீரசைவ வினாவிடை: இதில் வீரசைவ மதத்தின் சமயாசாரஇலக்கணங்கள் யாவும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன: அணா 5